30th January 1961]

**Sri A. VEDARATHNAM :** நம்முடைய மாநிலத்தில் ஆரம்பித்திருக்கிற ரப்பர் தோட்டங்களில் ரப்பர் உற்பத்தி துவங்கி விட்டதா? இல்லையானால் எப்பொழுது துவங்கும்?

**The Hon. Sri R. VENKATARAMAN :** அந்தக் கேள்வியை என்னுடைய சக அமைச்சர் விவசாய அமைச்சரிடம் போட வேண்டும்.

*Harijan Welfare Committee (North Arcot)*

*272 Q.—**Sri V. K. KOTHANDARAMAN :** கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதில் அளிப்பாரா—

வடாற்காடு ஜில்லா ஹரிஜன நல கமிட்டியிலுள்ள எல்லா அங்கத்தினர்களும் காங்கிரஸ் கட்சியைச் சார்ந்தவர்களாகவே இருப்பதற்குக் காரணமென்ன?

**The Hon. Sri P. KAKKAN :** The District Harijan Welfare Committees are advisory bodies constituted to advise the Government on matters relating to the amelioration of the conditions of the Harijans at district level and nomination of members to the Committee is not done on the basis of the party to which the members belong. While nominating members to the Committee due weight is given to the service rendered by them for the cause of the Harijan uplift. However, orders have been issued that the M.L.As., M.L.Cs., and M.Ps., of the taluk, where the meeting of the Committee is held, who are not already members of the Committee should be invited to attend the particular meeting as co-opted members.

**Sri V. K. KOTHANDARAMAN :** ஸார், கொஞ்ச நேரத்திற்கு முன்னால், கனம் அமைச்சரவர்கள் லாட்டரி சீட்டு போட்டு வினியோகம் செய்யப்படுகிறது என்று சொன்னார்கள். அதே போன்று, ஹரிஜனங்களுக்குக் கொடுக்கப்படும் கைத்தொழில் கருவிகள், ஜில்லா ரீதியாக கொடுக்கப்பட்டுக் கொண்டிருந்தது. இப்பொழுது சர்க்கார் உத்தரவு போட்டிருக்கிறபடி தாலூகா வாரியாகக் கொடுப்பதற்கு சப் கலெக்டர் ஒருவர், அஸிஸ்டெண்ட் டைரக்டர் ஆப் இன்டஸ்ட்ரீஸ் ஒருவர், அந்தத் தொகுதியில் உள்ள ஹரிஜன எம்.எல்.ஏ.—அப்படி அவர் இல்லாவிட்டால் ஹரிஜன காங்கிரஸ் சங்கத் தலைவர் ஒருவர் இம்மாதிரி இருக்கும் கமிட்டிதான் வினியோகம் செய்ய வேண்டும் என்று உத்தரவு போடப்பட்டிருக்கிறதா? அப்படியென்றால் அதன் நோக்கம் என்ன?

**The Hon. Sri P. KAKKAN :** கருவிகள் கொடுக்க கமிட்டிகள் இருக்கின்றன. உண்மையிலேயே யார் அவற்றை உபயோகிக்க கற்றுக் கொண்டிருக்கிறார்களோ அவர்களைப் பார்த்துக் கொடுக்கப்படுகிறது.

[30th January 1961

SRI V. K. KOTHANDARAMAN : ஜில்லா ரீதியில் கொடுக்கப் பட்டபோது, உண்மையிலேயே யார் யார் தொழிலைக் கற்றுக் கொண்டு இருக்கிறார்கள், திறமை உள்ளவர்களாக இருக்கிறார்கள் என்பதைப் பார்த்துக் கொடுக்கப்பட்டது. ஆனால், இப்பொழுது தாலுக்கா ரீதியில் கொடுக்கவேண்டும் என்று சொல்லும்போது, அந்த முறையை மாற்றுவதற்குக் காரணம் என்ன என்பதைத் தான் அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : மாறுதல் ஒன்றும் இல்லை; அதே முறையைத்தான் கையாளுகிறோம்.

SRI M. KALYANASUNDARAM : இம்மாதிரி கருவிகள் விநி யோகிப்பதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் கமிட்டியில் யார் யார் இருக்கவேண்டுமென்று சர்க்கார் உத்தரவு போட்டிருக் கிறார்களா ? அப்படியானால், அந்த உத்தரவைப் படிப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : அதுதான் சொன்னேன். ஒவ் வொரு ஜில்லா கமிட்டியிலும் ஏழு அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். அந்த ஜில்லாவிலுள்ள, எம்.எல்.ஏ., எம்.எல்.ஸி., எம்.பி., இவர் களைக் கோ-ஆப்டெட் மெம்பர்களாக சேர்த்துக்கொள்ளவேண்டும் என்று சொல்லியிருக்கிறது என்று தெரிவிக்கிறேன்.

*Film Finance Corporation*

* 273 *Q.*—SRI N. K. PALANISAMI : } SRI N. R. THIAGARAJAN : } Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal to set up a branch of the Film Finance Corporation to help the small producers in Madras by advancing loans at a reason able rate of interest?

THE HON. SRI R. VENKATARAMAN : Government have no information on the question.

SRI N. K. PALANISAMI : ஸார், சர்க்கார் இந்தச் சினிமாத் தொழிலை அபிவிருத்திச் செய்ய, அதன் தரத்தை உயர்த்து வதற்காக, சிறு பட உற்பத்தியாளர்களுக்கு படத்தின் தரத்தின் பேரில் கடன் கொடுக்க ஏதாவது உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த பிலிம் பைனன்ஸ் கார்பொரேஷன் என்பது மத்திய சர்க்கார் ஏற்படுத்தியிருக்கக் கூடிய ஒரு கம்பெனி அது கம்பெனிஸ் ஆக்ட்டின்கீழ் ரிஜிஸ்டர் செய்யப்படுகிறது. அவர்கள் எந்த விதமான உதவி செய்வார்கள் என்றால், படத்தின் செலவில் 75 சதவிகிதம் கடன் உதவியாகக் கொடுப்பதற்கு இந்த கம்பெனி ஏற்பாடு செய்யும். ஆனால், இன்னும் இந்தக் கம்பெனி ஆரம்பிக்கப்படவில்லை; விதிகள் தயாராகி வருகின்றன. கம்பெனி ஆரம்பித்த பிறகு என்ன உதவிகள் செய்வார்கள் என்று பார்க்கலாம்.